# இரு குரல்

## விக்னேஷ்வரன்

vwaran517@gmail.com

அட்டைப்படம் : அ.தமிழ்ச்செல்வன் - a.tamilselvan42@gmail.com

மின்னூலாக்கம் :சீ.ராஜேஸ்வரி - sraji.me@gmail.com

வெளியீடு : FreeTamilEbooks.com

# பொருளடக்கம்

நூல் உரை........................................................5

கதை-1 ஜன்னல் கதவு........................................7

கதை-2 பெர்த் டே (Birthday)........................61

# நூல் உரை

இரு குரல் என்னும் இந்நூலானது , இரண்டு சிறுகதைகளைக் கொண்ட ஒரு நூலாகும். இந்த நூலில் இடம் பெற்றுள்ள இரண்டு சிறுகதைகளும் சாதாரண மனிதர் வாழ்வில் நடந்த அசாத்திய சம்பவங்களில் கற்பனையுடன் புகுத்தி எழுதப்பட்டது. இந்த நூலில் ஒரு குற்றவியல் கதையும், ஒரு அறிவியல் கருத்தை அடிப்படையாகக் கொண்டக் கதையும் எழுதப்பட்டுள்ளது.

இந்த இரண்டு கதைகளும் முழுக்க முழுக்க கற்பனைக் கட்டமைப்பால் உருவானது. ''ஜன்னல் கதவு'' என்ற முதல் கதை குற்றவியல் சம்பவத்தை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டது. இரண்டாவதாக இடம் பெற்ற ''பெர்த் டே'' என்றக் கதை ஒரு அறிவியல் கருத்தை கற்பனையாகப் புகுத்தி எழுதப்பட்டது.

இந்நூலில் இடம்பெற்றுள்ள இரண்டு கதைகளின் மொழிநடையும் அந்தந்த கதைகளுக்கு ஏற்றவாறு எழுதப்பட்டுள்ளது.கதைகளில் இடம் பெற்றுள்ள கதாப்பாத்திரங்கள் பேசுவதைப் போன்றே வசனங்கள் வசப்படுத்தப்பட்டுள்ளது.

விறுவிறுப்பான கதைநடையும் கதையின் கதாப்பாத்திரத்தின் வசனங்களும் சரியாக பொருத்தப்பட்ட கதைக் களமும் படிப்போரின் மனதில் ஒரு நல்லத் தாக்கத்தை ஏற்படுத்தும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.இந்த நூலில் இடம் பெற்றுள்ள இரண்டு கதைகளும் நல்லப் பொழுதுபோக்கையும் ஒரு சிறிய கருத்தையும் நம்மிடையே தரும் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

# கதை-1 ஜன்னல் கதவு

*இக்கதையில் இடம்பெறும் பெயர்கள்,நிகழ்வுகள், கதாப்பாத்திரங்கள் அனைத்தும் கற்பனையே,யாரையும் குறிப்பிடுவது அல்ல...*

*21-08-2019.*

கோவை

இரவு *10* மணிக்கு மழை ஆரம்பித்தது.என்.ஜி.ஐ கலை மற்றும் அறிவியல் கல்லூரி வளாகத்தின் உள்ளே இருந்த கேர்ள்ஸ் ஹாஸ்டலில் கொண்டாட்டத்திற்குப் பஞ்சமில்லை.எல்லோரும் தங்களது ரூம்-மிற்குச் சென்று சேர இரவு *11* மணி ஆனது.

முதல் மாடியில் இருக்கும் *112*-ஆம் ரூம்மில் இருந்த மாதவி தன் சக தோழிகளுடன் அரட்டையடிக்க நான்காவது மாடியில் இருக்கும் *412*-ஆம் ரூம்மிற்குச் செல்வது வழக்கம்.அன்றும் மாதவி தவராமல் *412*-ஆம் ரூம்மிற்குச் சென்றாள். ரூம்மின் உள்ளேச் சென்றபோது,அந்த ரூம்மில் தங்கியிருந்த அன்னபூர்னா ஜன்னல் வழியே எதையோ உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

மாதவி : என்னடி? வெளிய என்ன பாத்திட்டு இருக்க?

அன்னபூர்ணா : இல்ல...பேஸ்கெட்பால் கோட்ல எதோ சத்தம் கேட்டுச்சு. யாரோ அங்க இருக்குற மாதிரி இருந்துச்சு அதான் பார்த்தேன்.

மாதவி: தள்ளு, நான் பாக்குறேன்... ஒரே இருட்டா இருக்கே?;அது வேற எதாவது சத்தமா இருக்கும் விடு.

சிறிது நேரம் அவர்களது வழக்கமான அரட்டைப் பேச்சுத் தொடர்ந்தது.வெளியில் மழையும் தன்னுடைய வேலையைத் தொடர்ந்து செய்து கொண்டே இருந்தது.இவர்களின் அரட்டைப் பேச்சை முடிவுகட்ட ஒரு மின்னல் வெட்டியது.ஹாஸ்டலில் பவர் கட் ஏற்பட்டது.தங்களுடைய அரட்டைக்குத் தற்காலிகத் தடை போட்டுவிட்டு மழையை ரசிக்க ஜன்னலின் பக்கம் இருவரும் வந்து நின்றனர்.

ஹாஸ்டல் கேட் அருகே பேஸ்கெட்பால் கோட்-டிலிருந்து ஒருவர் நடந்து வருவதை இருவரும் கவனித்தனர்.அடுத்து வந்த

மின்னலோடு இவர்களுக்கு அதிர்ச்சியும் காத்திருந்தது. மின்னலின் ஒளியில் தெரிகிறது நடந்து வந்த மனிதரின் உருவம். கருப்பு நிற ரெயின் கோர்ட், இடதுகையில் பேஸ்கெட்பால் இருந்தது. இருவரின் அதிர்ச்சிக்குக் காரணமாக அவரின் வலதுகையில் ஒரு கத்தி மின்னலின் ஒளியில் மின்னியது.

பதற்றத்துடன் இருவரும் கீழே இறங்கி வந்து ஹாஸ்டல் கேட்டில் முன்னால் நின்று சுற்றிமுற்றிப் பார்த்தனர். அனால் யாரையும் காணவில்லை.

அன்னபூர்னா : என்ன டி யாரையும் காணோம், நம்ம தான் பாத்தோம்ல யாரோ ஒருத்தர் நடந்து
போனான். எனக்கு பயமா இருக்கு

மாதவி : ஹெய், பயப்படாத; இத பத்தி யார் கிட்டயும் சொல்லாத காலைல விசாரிச்சுக்கலாம். இப்ப வா தூங்கப் போலாம். வா...

*22-08-2019*

எப்போழுதும் தன் காலேஜிற்கு முதலில் வரும் "செலினா"அன்றும் காலேஜிற்கு வந்தாள்.மெயின் கேட் திறக்கப்படவில்லை.தன்னுடைய செல்ஃபோனில் நேரத்தைப் பார்த்தாள் செலினா.நேரம் 6:55.வாட்ச்மேன் யாரையும் காணவில்லை.

செலினா : செ... என்ன யாரையும் காணோம்.சரி நம்மளே கேட்ட திறந்திட  வேண்டியதுதான்.

மெயின் கேட்டைத் திறந்து உள்ளேச் சென்ற செலினா,தான் வந்த வண்டியை நிறுத்தி விட்டுத் திருப்பும் போது பேஸ்கெட்பால் கோட்டில் ஏதோ வித்தியாசமாகக் கிடப்பதைக் கண்டாள்.பேஸ்கெட்பால் கோட்டுக்குள் சென்று அது என்னவென்றுப் பார்க்கத் துணிந்தாள்.ஈக்கள் மொய்த்துக் கொண்டிருந்தது,அருகில் நெருங்க நாற்றம்

அடிக்க ஆரம்பித்தது.செலினா மூக்கை மூடிக் கொண்டு அருகில் நெருங்கினாள்.

சற்றுத் தொலைவிலேயே ஒரு ப்ளூ கலர் சூட்கேஸிற்கு அருகில் இருப்பது என்ன என்றுத் தெரிந்து கொண்ட செலினாவிற்குப் பதற்றம் தொற்றிக்கொண்டது.பயத்தில் ஓடத் தொடங்கினாள்.பேஸ்கெட்பால் கோட்-ஐ விட்டு வெளியேச் செல்லும்போது காலேஜிற்கு இரண்டாவதாக வந்த "கார்த்திகா",செலினிவிடம் விசாரிக்கிறாள்.

கார்த்திகா : என்னாச்சு? ஏன் இவ்வளவு பதட்டமா ஓடி வர்ற?

(பயத்தில் செலினாவின் வாய் உளறியது)

செலினா : அங்க..,அங்க யாரோ செ...செத்துக் கிடக்காங்க.

கார்த்திகா : சரி,சரி நீ பயப்படாத.நா போலிஸ்க்கு ஃபோன் பண்றேன்.

காலை 7:10 மணி

க.க.சாவடி போலிஸ் ஸ்டேசனில் புதிதாக வேலைக்குச் சேர்ந்தார் எஸ்.ஐ.''அருண்''.இன்ஸ்பெக்டர் ''ஜனா''வின் வாழ்த்து பெற்ற மறுநொடி ஸ்டேசன் ஹெட் கான்ஸ்டபிள் ''மனோஜ்'' பேச ஆரம்பித்தார்.

மனோஜ் : சார்...

ஜனா : சொல்லுங்க மனோஜ்.

மனோஜ் : என்.ஜி.ஐ காலேஜ்-ல டெட் பாடி கிடக்கிறதா கம்ப்ளைண்ட்

வந்துருக்கு சார்.

ஜனா : அருண்..?

அருண் : சார் (மிடுக்கான சத்தத்துடன்)

ஜனா : இந்த கேஸ்ஸ நீங்களே ஹேண்டில் பண்ணுங்க,அதோட காலேஜ் டைம்;கூட்டம் ஜாஸ்தி ஆகும்;ரெண்டு கான்ஸ்டபிளையும் கூட்டிடுப்போங்க;அப்பறம் மனோஜும் உங்க

*கூட வருவாரு. நா மீட்டிங் முடிச்சிட்டு நேரா அங்க வந்துறேன்.*

*அருண்,தன் குழுவுடன் சம்பவ இடத்திற்கு வந்து சேர்ந்தார்.அந்த இடத்திலேயே பிரேதப் பரிசோதனை செய்ய குழு வரவழைக்கப்பட்டது.முதல் கட்ட விசாரணையும் நடைபெற்றது.*

*அருண் : மனோஜ்..? பாடியோட டீடெயில்ஸ் என்ன?*

*மனோஜ் : சார்;விக்டிம் நேம் தீபிகா,வயசு 18,ஊரு காளையார்கோவில்,*

*பி.இ ஆர்கிடெக்சர் படிக்கிறா,காலேஜ் குனியமுத்தூர்-ல*

*இருக்கு,அங்கப் படிக்கிறவங்களும் இங்க தான் சார்*

*தங்கிருக்காங்க.இவளுக்கு இந்த ஊர்ல சொந்தம் ஒரு*

பெரியப்பா இருக்கார்.அவருக்கும் இன்ஃபார்ம்

பண்ணியாச்சு சார்.

அருண் : அந்தப் பொண்ணோட ரூம் நம்பர் எது?

மனோஜ் : 208 சார்.

அருண் : முதல்ல பார்த்தது யாரு?

மனோஜ் : செலினா-னு ஒரு பொண்ணு சார்.எப்பவும் அதான்

காலேஜ்க்கு முதல்ல வரும்.

அருண் : அப்போ..நமக்கு கால் பண்ணது?

மனோஜ் : சார் ஆது "கார்த்திகா"-னு ஒரு பொண்ணு சார் அதுதான்

ரெண்டாவதாப் பார்த்திருக்கு.கார்த்திகாவுக்கு தீபிகா-வ

ஆல்ரெடி தெரியுமாம் சார்.

அருண் : கார்த்திகா,செலினா ரெண்டு பேரயும் கூப்டுங்க;நீங்க போய்

மத்தவங்கள விசாரிங்க.அப்பறம் ஸ்டேசனுக்கு ஃபோன்

பண்ணி ரெண்டு லேடி காண்ஸ்டபிள வரச் சொல்லுங்க.

மனோஜ் விசயத்தைச் சொல்ல;கார்த்திகா,செலினா அருணைப் பார்க்கச் சென்றனர்.அருண் செலினாவைப் பார்த்து கேள்வி கேட்க ஆரம்பிக்கிறார்.

அருண் : நீ வரும்போது மணி என்ன?

செலினா : என் ஃபோன்ல நா டைம் பார்க்கும் போது 6:55 இருந்துச்சு.

அதே கேள்வியை கார்த்திகாவிடம் திருப்பினார் அருண்.

கார்த்திகா : எனக்கு டைம் சரியா தெர்ல சார்.அனா செலினாவுக்கு

அப்பறமாதான் நா வந்தேன்.

அருண் : அப்போ மெயின் கேட்ல வாட்ச்மேன் இருந்தாரா?

இருவரும் இல்லை என்பதைப் போல் தலையசைத்தனர்.

அருண் : சரி நீங்கப் போகலாம்.

அருண்,மனோஜ் விசாரிக்கும் இடத்திற்கு நடந்துச் சென்று கொண்டிருந்தார்.மனோஜ் எம்.சி.ஏ ப்ளாக் வாசலில் தன்னுடைய விசாரணையை நடத்திக் கொண்டிருந்தார்.இரண்டுப் பெண் காண்ஸ்டபிள்களும் வந்து சேர்ந்தனர். அருண் அவர்களிடம் பேசினான்.

அருண் : ரூம் நம்பர் 208.செகண்ட் ஃப்ளோர்,அந்த ரூம்ம ப்ளாக் பண்ணி

வைங்க.

இருவரும் சேர்ந்து 208-ம் ரூம்மை யாரும் உள்ளே வராதபடி ப்ளாக் பண்ணி வைத்தனர்.அருண் அங்கிருந்த ஒரு வாட்ச்மேனிடம் விசாரிக்கிறார்.

அருண் : உன் பேரு என்ன?

வாட்ச்மேன் தன் பெயர் ஹரி என்றான்.

அருண் : ரெண்டு வாட்ச்மேன் ரூம் இருக்கு ஆனா நீ ஒரு ஆள் தான்

இருக்க?

ஹரி : நேத்து எனக்கு நைட் டியூட்டி. காலையில 7:30 மணிக்குத்தான்

சிப்டு மாறுவோம்.நேத்து மெயின் கேட்ல ஆனிஷ் தான் சார்

இருந்தான்.

அருண் : ஆனிஷா?அது யாரு?

ஹரி : சார் அவன் புதுசா சேர்ந்த பையன் சார்.நேத்து நைட் அவன்தான்

மெயின் கேட்-ல டியூட்டி-ல இருந்தான்.நேத்து நைட் எனக்கு உடம்பு

முடியாததுனால நைட் சாப்டிடு 10 மணிக்கே தூங்கிட்டேன் சார்.

அருண் : நீயெல்லாம் ஒரு நைட் வாட்ச்மேன்.சரி அந்த ஆனிஷ் வீடு எங்க

இருக்கு?

ஹரி : மரப்பாலம் சார்.

விசாரணையை முடித்த மனோஜ் அருணிடம் பேச வந்தார்.ஆனால் மனோஜ் பேசுவதற்கு முன் அருண் பேச ஆரம்பித்தார்.

அருண் : மெயின் கேட் வாட்ச்மேன் பேரு ஆனிஷ். நைட்

இருந்துருக்கான்,அனா காலைல இல்ல.மரப்பாலத்துல தான்

அவன் வீடு இருக்கு.உடனே மரப்பாலம் ஸ்டேசனுக்கு

இன்ஃபார்ம் பண்ணுங்க.

மனோஜ் : ஓகே சார்.சார்..?

அருண் : சொல்லுங்க.

மனோஜ் : கம்பிளீட்டா செக் பண்ணியாச்சு சார்.அந்தப் பொண்ணப்

பத்தி எந்த ப்ளாக் மார்க்கும் இல்ல.ரெண்டு பொண்ணுங்க

மட்டும் நைட் வித்தியாசமா ஒருதன் நடந்த போறதப்

பாத்திருக்காங்க.

அருண் : அவங்களத் தனியா வைங்க.நா 208 க்கு போயிட்டு வறேன்.

208 க்குச் சென்ற அருணுக்கு எந்தத் தடயமும் கிடைக்கவில்லை.மீண்டும் கீழே இறங்கி வந்தார்.

மனோஜ் : சார் இப்ப தான் நியூஸ் வந்துச்சு..

அருண் : என்ன?

மனோஜ் : ஆனிஷ்,அவன் வீட்டுலயே தூக்கு மாட்டி செத்துருக்கான் சார்.

இன்ஸ்பெக்டர் ரமேஷ் இன்வெஸ்டிகேட் பண்ணிட்டு இருக்கார்

ரிப்போர்ட் கொண்டு வரச் சொல்லிருக்கேன்.

அருண் : அந்த ரெண்டுப் பொண்ணுங்களையும் வரச் சொல்லுங்க.

மாதவியும் அன்னபூர்னாவும் வரவழைக்கப்பட்டனர்.அன்னபூர்னாவுக்கு பயத்தில் குளிர் காய்ச்சல் ஏற்பட்டதால் ஒருப் போர்வைக்குள் நடுங்கிக் கொண்டே வந்தாள்.

அருண் : சொல்லுங்க, என்ன பார்த்தீங்க?

மாதவி : முதல்ல பேஸ்கெட்பால் கோட்-ல ஏதோ சத்தம் கேட்டுச்சுன்னு

அன்னபூர்னா சொன்னா.அனா அங்க இருட்டா இருந்ததால

எங்களுக்கு ஒன்னும் தெரியல சார்.

ஹரி இடையில் குறிக்கிட்டான்.

ஹரி : சார் பவர் ரூம் 1-ல இருக்குற ஜெனரேட்டர்ல இருந்து தான் சார்

பேஸ்கெட்பால் கோட்டுக்கு கரெண்ட் போகும்.ஆனா அது ரெண்டு

நாளைக்கு முன்னாடியே ரிப்பேர் ஆகிருச்சு சார்.

அருண் : எத்தன மணி இருக்கும்?

அன்னபூர்னா : 11 மணி இருக்கும் சார்.

மாதவி : அப்பறம் ஒரு 11:30 அப்போ கரண்ட் கட் ஆச்சு,அப்போ ஹாஸ்டல்

கேட் முன்னாடி யாரோ ஒருதன் கையில் பேஸ்கெட்பால்,கத்தி

வச்சிக்கிட்டு நடந்து போனான் சார்.அனா முகத்த மட்டும்

பார்க்க முடியல சார்.

அருண் : நீங்க ஏன் யார்கிட்டயும் இதப் பத்தி சொல்லல?

இருவரும் ஒன்றும் பேசாமல் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டிருந்தனர்.

அருண் : தீபிகாவோட ரூம் மேட் யாரு,மனோஜ்?

மனோஜ் : யாழினி சார்.

மீண்டும் கேள்வியை மாதவியை நோக்கித் திருப்பினார் அருண்.

அருண் : உன் ரூம் எது? ரூம் மேட் யாரு?

மாதவி : என் ரூம் 112 சார்,என் ரூம் மேட் அருள்மோழி ;அவ ஊருக்குப்

போயிட்டா சார்.

அருண் : எங்கிருந்து அவனப் பார்த்த?

*மாதவி : இவளோட ரூம்ள இருந்துதான் சார் பாத்தேன், 412.*

*அருண் : அந்த ரூம்ல வேற யார் இருந்தா?*

*மாதவி : நானும், இவளும் தான் சார்.இவ ரூம் மேட் ரோஜாவும்*

*ஊருக்குப் போயிட்டா சார்.*

*அருண் : சரி நீங்க போகலாம்.*

*(இருவரும் சென்றுவிட்டனர்)*

*மனோஜ் : சார் தீபிகாவ ஒருத்தன் ஸ்கூல் படடிக்கும் போதே லவ்*

*பண்ணிருக்கான் சார்.அனா அவங்க ஸ்கூல்லயே*

*பிரிஞ்சுட்டதா,தீபிகா சொன்னதா யாழினி சொன்னா.*

*அருண் : எனக்கென்னமோ ;*
*மாதவி,அன்னபூர்னா மேலதான் சந்தேகமா*

இருக்கு. எதுக்கும் அவங்க மேல ஒரு கண்ணு இருக்கட்டும்.

பிரேத பரிசோதனையில் இருந்த ஃபாரென்சிக் டிபார்ட்மென்ட்-ஐச் சேர்ந்த ராஜேஷ் அருணிடம் பேச வந்தான்.

ராஜேஷ் : சார்,சீஃப் கூப்டுறார்.

அருண் : இதோ வற்றேன்.

அருண் பரிசோதனை நடந்து கொண்டிருந்த பேஸ்கெட்பால் கோட்டிற்குச் சென்றனர்.அங்கே ஃபாரென்சிக் டிபார்ட்மென்ட் சீஃப் விக்கியைச் சந்தித்தார்.

விக்கி : ஹலோ சார்,பாடிய ஃபுல்லா செக் பண்ணதுல வயித்துல

கத்தியால கீறியிருக்கான்,தொண்டைக்கு கீழ நெஞ்செலும்பு

ஆரம்பிக்கிற சின்ன குழியில கத்தியால குத்தியிருக்கான்.

அதுல ப்ளட் லாஸ் ஆகி இறந்துருக்கா.வாய துணியால கட்டி

அதுக்கு மேல டேப் போட்டு ஒட்டிருக்கான்.கைய கயித்தால

பின்னாடிக் கட்டிருக்கான்.இந்தப் பொண்ணு கிட்டத்தட்ட

நேத்து நைட் ஒரு 11 மணிக்கு செத்துருக்கனும்.மத்ததெல்லாம்

ஜி.ஹெச்-க்கு கொண்டு போனாதான் தெரியும். இப்போ நாங்க

அந்த ப்ளூ சூட் கேஸ்ஸ தான் டெஸ்ட் பண்ணிட்டுருக்கோம்.

அதுல ஒரு சிலுவ கீ செயின் கிடைச்சது.இத வச்சு எதாவது

பண்ண முடியுதானுப் பாருங்க.

மனோஜ் : இந்த சிலுவையப் பார்த்ததும்தான் ஞாபகம் வருது சார்.

அருண் : என்ன?

மனோஜ் : போன மாசம் இதே காலேஜ்ல ஒரு கொல நடந்துச்சு.அதுல

இதே மாதிரி ஒரு சிலுவை கிடச்சது சார்.அந்தக் கேஸ்ஸ

இதே காலேஜ் பையன் தான் சார் சால்வ் பண்ணான்.

அருண் : காலேஜ் பையனா? யாரு அவன்? எப்படி சால்வ் பண்ணான்?



மனோஜ் : உங்களுக்கு முன்னாடி எஸ்.ஐ -ஆ இருந்த ''பரத்வாஜ்'' சார்

தான் இந்தக் கேஸ் எடுத்து நடத்துனாரு.அன்னைக்கி இந்தப்

பையன்தான்,நான் இந்தக் கேஸ்ஸ சால்வ் பண்ணிக்

குடுக்குறேன்,அப்படி இப்படின்னு பேசி ஒரு வழியா பரத்வாஜ்

சார சம்மதிக்க வச்சுட்டான்.அந்தக் கேஸ்ல செத்தது

சினேகான்றப் பொண்ணு.டேபிள்ல தலைய வச்சபடி

செத்துக்கிடந்துச்சு.நாங்க பாய்சன் குடுத்துறுப்பாங்ஙகனு

அனா,அந்தப் பய கழுத்த நெரிச்சு கொன்றுக்காங்கனு

சொன்னான்.சி.சி டிவி- பார்த்து யார் வந்தது போனதுன்னு

புடிச்சோம்.நாலு பேர் சஸ்பெக்ட்.முகமது,கார்தீஸ்வரி,திவ்யா

அப்பறம் காயத்ரி.இது அவங்க க்ளாஸ் ரூம் குள்ளயே நடந்த

கொல சார்.

நாங்க சி.சி.டிவி-லப் பார்க்கும் போது,முதல்ல எல்லா

ஸ்டூடென்சும் க்ளாஸ்ரூம்ம விட்டு வெளியேப் போனாங்க.

அனா சிநேகாவும் காயத்ரியும் மட்டும் வரல. கொஞ்ச நேரத்துல

காயத்ரி மட்டும் வெளியே வந்தா.அப்பறம் முகமது உள்ளேப்

போயிட்டு வெளியே வந்தான்.அதுக்கப்பறம் கார்த்தீஸ்வரியும்

திவ்யாவும் போய்ப் பார்க்கும் போது செத்துக்கிடந்தாள்.

(அருணுக்கு மேலும் ஆர்வம் அதிகமானது)

காயத்ரிட்ட கேட்கும் போது சினேகா தலைவலிக்கிறதாகவும்

நா அப்பறம் வரேன்னு சொன்னதாகவும் எங்கக் கிட்ட

சொன்னா. மத்தவங்க ;அதாவது முகமது,கார்த்தீஸ்வரி

இவங்க போய்ப் பார்க்கும் போது சினேகா சேர்-ல

உட்கார்ந்து டேபிள்ல தலைய வச்சபடி தூங்கிறதா

நெனச்சுருக்காங்க.திவ்யா எழுப்பும் போது தான் சினேகா

செத்துப்போனதே தெரிஞ்சது.

அருண் : அப்போ...யார் தான் கொன்னது? எப்படி அவன் கண்டுபிடிச்சான்

(மனோஜ் ஒரு வினாடி அமைதியானார்)

மனோஜ் : காயத்ரி தான் சார் கொன்னது....

அருண் : அவ எப்படி,அவ தானே க்ளாஸ் ரூம்ம விட்டு முதல்ல வெளிய

வந்தா?

மனோஜ் : அவளோட இடது கை ஆள்காட்டி விரல்,சின்னதா ஒரு

வெள்ளைக் கல்லு பதிச்ச மோதிரம் போட்டுருந்தா.

அதில இருந்த சின்ன ரத்தக்கறைய வச்சுத்தான்,இவன்

சினேகாவோட கழுத்துல ஒரு சின்னக் கீறல் இருந்ததப்

பார்த்துருக்கான்,ரெண்டையும் மேட்ச் பண்ணி புடிச்சிட்டான்.

அருண் : கொல்ற அளவுக்கு என்ன மோட்டிவ்?

மனோஜ் : காயத்ரி லவ் பண்ணப் பையன் அவள கழட்டி விட்டு சினேகாவ

லவ் பண்ணிருக்கான்.இது பிரச்சனை ஆகி கொல பண்ற

அளவுக்குக் கொண்டு போயிருச்சு.

அருண் : ரொம்ப அறிவாளி தான்.சரி,அவன் பேரு என்ன?

*மனோஜ் : ரவி சார்.இந்தக் காலேஜ்-ஓட பாய்ஸ் ஹாஸ்டல் ரெண்டு*

*கிலோமீட்டர் தள்ளி இருக்கு அங்க தான் இருக்கான்.*

*அருண் : மணி 8:00 ஆச்சு இன்நேரம் என்ன பண்ணிட்டு இருப்பான்.*

*பாய்ஸ் ஹாஸ்டலில் ரூம் நம்பர் 210-ல் ரவி, அவன் ரூம் மேட் லோகேஸின் சட்டையை லோகேஸிடம் இருந்து புடுங்கிக் கொண்டிருந்தான்.*

*லோகேஸ் : டேய்ய்ய்ய்ய்………*

*ரவி : டேய், இன்னைக்கி இந்தச் சட்டைய நா போட்டுட்டு போயிக்குறேன்*

*டா..!*

*லோகேஸ் : டேய் இது புதுசுடா, இத நான்தான்டா போடனும்.*

*ரவி: ஆல்ரெடி என்னோட பேன்ட நீ போட்ருக்க, இன்னைக்கு இந்த*

*சட்டைய நா போடாம விட மாட்டேன்டா டேய்...*

*அந்த நேரத்தில் ரவியைக் கூப்பிட வார்டன் ரவியின் ரூம்மிற்கு வந்துக் கதவைத் தட்டினார்.*

*லோகேஸ் : எவன்டா அவன் துரந்து இருக்குறக் கதவத் தட்றது?*

*வார்டன் : எ... நான்டா உன் வார்டன்.*

*(வார்டன் கதவைத் திறந்து உள்ளே வந்தார்.*

*லோகேஸ் : ஐயோ சார் நீங்களா..?*

*(ரூம் முழுக்க சிதறிக் கிடக்கும் துணிகளை வார்டன் கவனித்தார்)*

*லோகேஸ் : சார் சும்மா அன்புச் சண்ட....*

*வார்டன் : அன்பு... உன்ன அப்பறம் கவனிச்சுக்கிறேன்.ஏப்பா ரவி உன்ன*

போலிஸ் தேடி வந்துருக்காங்கப்பா.நம்ம காலேஜ் கேர்ள்ஸ்

ஹாஸ்டல் பக்கத்துல எதோ கொல நடந்துருகாம் அதான்

உன்னக் கூப்டுறாங்க வா...

ரவி : வற்றேன் சார்.

லோகேஸ் : மச்சான் கேர்ள்ஸ் ஹாஸ்டலுக்கா போற...

ரவி : ஆமா.

லோகேஸ் : நானும் வற்றேன் டா.

ரவி : ஏன்?

லோகேஸ் : உனக்கு அசிஸ்டன்ட் டா.உனக்கும் கேஸ் சால்வ் பண்ண

மாதிரி இருக்கும்,எனக்கும் என் ஆள பாத்த மாதிரியும்

இருக்கும்.

ரவி : செருப்படி வாங்காம இருந்தா சரி, வா...

லோகேஸ் : ஐ..,ஜாலி...

ரவியும், லோகேஸூம் காலேஜிற்கு வரும் போது மெயின் கேட்டில் கூட்டமாக இருந்தது.இன்ஸ்பெக்டர் ரமேஷும் தன் ரிப்போர்டுன் வந்திருந்தார்.

லோகேஸ் : என்ன மச்சான்? பொங்களுக்கு முன்னாடி நாள்

சிங்காநல்லூர்-ல இருக்குற மாறி இவ்ளோ கூட்டம்?

ரவி : கொலை நடந்துருக்குள்ள,வாடா...

லோகேஸ் : டேய் மச்சான், இந்தக் கான்ஸ்டபிள பாறேன் அமுல் பேபி

மாறியே இருக்கான்,அங்கப் பாற்றா ஜாக்கி சானுக்கு

சித்தப்பா பையன் மாறி ஒருத்தன்.

ரவி : டேய் சும்மா வாடா.

*(இருவரும் ஆருணைச் சந்தித்தனர்)*

*அருண் : நீதான் ரவியா?*

*ரவி :ஆமா சார்.*

*அருண் : அப்போ இவண்.*

*ரவி : என் ஃப்ரெண்டு சார்.எதாவது டீ வாங்க யூஸ் ஆவான்னு கூட்டிடு*

*வந்தேன்.*

*(லோகேஸ் ரவியைப் பார்த்து முறைத்தான்)*

*ரவி : சும்மா மச்சான் வா.*

*ஹாஸ்டலில் இருந்த அனைவரிடமும் விசாரணை நடைபெற்றது. ஃபாரண்சீக்கின் சீஃப் விக்கி,அருணிடம் பேச அருகில் வந்தார்.*

*விக்கி : சார் மத்ததெல்லாம் இங்க இருக்கட்டும்.அதெல்லாம் நாங்க*

*டெஸ்ட் பண்ணிட்டோம்.பாடிய மட்டும் டேக்ஓவர் பண்ணி*

ஜீ.ஹெச்-க்கு கொண்டு போனும்.அதுக்கு முன்னாடி நீங்க

யாராவது பார்க்கிறதா இருந்தா பாருங்க.

ரவி,அருண், விக்கி,மனோஜ்,லோகேஸ் மற்றும் மாதவி, அன்னபூர்னா ஆகிய அனைவரும் பேஸ்கெட்பால் கோட்டுகுச் சென்றனர்.

ரவி : இந்தப் பொண்ணு எப்போ தொலைஞ்சு போனா?

மனோஜ் : குனியமுத்தூர்ல இருந்து 4:30 க்கு பஸ் ஏறி இங்க 5:00

மணிக்கு வந்ததை யாழினி பார்த்திருக்கா.அதுக்கப்றம்

யாரும் பார்க்கல.8:30 க்கு யாழினி ஃபோன் அடிச்சுப்

பார்த்தப்போ,நா பக்கத்துல தான் இருக்கேன் வந்துறேன்னு

சொல்லிருக்கா.அப்பறம் 8:45 க்கு ஃபோன் பண்ணும்

போது ஃபோன் ஸ்விட்ச் ஆஃப் ஆகிருக்கு.

இதைக் கேட்டுக் கொண்டே ரவி பிணத்தின் மீதுள்ளக் காயங்களை உற்றுப் பார்த்தான்.பாக்கெட்டில் இருந்தப் பேனாவை எடுத்து காயத்தின் வீரியத்தை அறிந்து கொண்டான்.அந்தப் பிணத்தின் துணியில் எண்ணெய்க் கறை போல் ஒன்று இருப்பதை ரவி பார்த்தான்.ரவி அந்தக்கறையை முகர்ந்து பார்க்கும் போது மாதவி ரவியை கேவலமாக ஒரு பார்வை பார்த்தாள்.அதைக் கவனித்த ரவி மாதவியை முறைத்தான்.ரவி மனதிற்குள் தானேப் பேச ஆரம்பித்தான்.

ரவி : எந்த வாசனையும் இல்ல.

லோகேஸ் : என்னடா பேசுற..?

ரவி : டே மச்சான் ,பவர் ரூம் 1-ல பேட்டரிக்கு ஊத்துற டிஸ்டில்டு வாட்டர்

கீழக் கொட்டிருக்கானு பாரு?

லோகேஸ் : மச்சான் ஆமா டா. இங்க அந்த வாட்டர் கீழக் கொட்டிருக்கு.

ரவி அருணைப் பார்த்து பேச ஆரம்பித்தான்.

ரவி : 8:30 மேல தீபிகாவ அங்கதான் கட்டிப் போட்டுருந்துறுக்காங்க.

அனா என்னோடக் கேள்வி என்னா கொன்னுட்டு ஏன் இங்கயே

விட்டுட்டு போனானுதா தெரியல...

திடிரென விக்கி தன்கையை உதறினார்.

ராஜேஷ் : சார் என்னாச்சு சார்.

விக்கி : என்னனு தெரியல வலது கை நரம்பு ரெண்டு நாளா வலிக்குது.

ரவி : கை..?(மனதிற்குள்)

யோசித்த ரவி உடனே பிணத்தின் வயிற்றில் இருந்த காயத்திற்குள் வெவ்வேறு இடத்தில் பேனாவால் தொட்டுப் பார்கிறான்.

ரவி : கரெக்ட்...

அருண் : என்ன?

ரவி : இந்தக் கொலையப் பண்ணவன் ஒரு "இடதுகைப் பழக்கம்

உள்ளவன்".வயித்துல இருக்குறக் கீறலப் பாருங்க.தீபிகாவோட

வலது பக்கம் பெருசாவும் , இடது பக்கம் சின்னதாகவும் இருக்கு.

அதோட கழுத்துல கத்தி குத்தப்பட்ட காயமுமம் இடது கையால

குத்துனா எந்தக் கோணத்துல இருக்குமோ அதே மாதிரி இருக்கு.

பிணத்தை வண்டியில் ஏற்றியப்பின் விக்கியும் ராஜேஷும் இங்கேயே இருந்தனர்.

மாதவி : அவ துணிய எதுக்கு முகர்ந்து பார்த்த?

ரவி : மழைல நனைஞ்ச பாடி இல்லயா அதான் அந்தக் கற டிஸ்டில்டு

வாட்டர் தான்னு கன்ஃபார்ம் பண்ணிக்கிட்டேன்.

கேர்ள்ஸ் ஹாஸ்டல் அருகில் போடப்பட்ட டேபிளில் தீபிகாவின் ப்ளூ சூட்கேஸில் இருந்த சோதனை செய்யப்பட்ட பொருட்கள் இருந்தது.அதில் இருந்த தீபிகாவின் டைரியை கையுறை போட்டுக் கொண்டு எடுத்தான் ரவி.முதல் பக்கத்தில் அவளின் அம்மா, அப்பா போட்டோ மற்றும் செல்ஃபோன் நம்பர் இருந்தது.அதன் பிறகு எந்தப் பக்கத்திலும் எதுவும் எழுதப்படவில்லை.ராஜேஷும் விக்கியும் பேசிக்கொண்டிருந்தது ரவியின் காதில் விழுந்தது.

ராஜேஷ் : சார்..?வாங்க சார் சாப்ட போலாம்.

விக்கி : 4 வருஷமா என் கூடவே இருக்க,நான் காலைல டீ மட்டும் தான்

குடிப்பேன்னு உனக்குத் தெரியாது.போய் டீ வாங்கிட்டு வா..!

ரவி : 4 வருஷம் (மனதிற்குள்)

உடனே ரவி கையில் இருந்த டைரியின் வருடத்தைப் பார்த்தான்.வருடம் 2016.அது லீப் வருடம் என அறிவுக்கு எட்டியதும்,உள்ளே புரட்டினான்.பிப்ரவரி 29 ம் தேதிக்கான பேப்பர் இல்லை.அந்தப் பேப்பர் இருந்ததற்கான தடயமே இல்லை.ஆனால் அந்தப் பேப்பர் எங்கே என்றக் கேள்வி மட்டும் ரவியின் எண்ணத்தில் உருண்டோடியது.

சுற்றிமுற்றிப் பார்த்த போது ஃபுட்பால் க்ரவுண்ட் அருகில் இருந்த சிவப்பு நிற குப்பைத் தொட்டி கண்ணில் பட்டது.டைரியை டேபிளில் வைத்து விட்டு,யாருக்கும் புரியாத வகையில் வேகமாக ஓடினான்.குப்பைத் தொட்டியைத் திறந்து

உள்ளேத் தன் கைகளை விட்டுக் கிளறினான்.லோகேஸ் வேகமாக ரவியின் அருகில் வந்தான்.லோகேஸ் அருகில் வருவதற்குள் ரவி ஒரு பேப்பரை எடுத்தான்.இல்லாமல் போன அதே டைரியின் பேப்பர்.

அந்தப் பேப்பரின் தீயினால் சுட்டதால் ஓட்டையாக இருந்தது.அதற்கு கீழே ஒரு முகவரி இருந்தது.லோகேஸிற்குப் பின்னால் அருணும் மனோஜும் வந்து சேர்ந்தனர்.அந்தப் பேப்பரில் ஓட்டையாய் இருந்த இடத்திலிருந்த சாம்பலை எடுத்து முகர்ந்தான் ரவி.அனைவரும் ரவியிடம் வந்தனர்.

ரவி : சிகரெட் வச்சு சுட்டுருக்கான்.கோல்டு ஃப்ளெக் கிங்ஸ்.

குப்பத் தொட்டில சிகரெட்டோட மிச்சமும் அந்த டப்பாவும் இருக்கு.

இந்த அட்ரெஸ் யாரோடதுன்னு பாருங்க.

(மனோஜ் எட்டிப் பார்த்தார்)

*மனோஜ் : சரி நா பாக்குறேன்.*

*(பேப்பரை கையோடு வாங்கிச் சென்றார் மனோஜ்)*

*ரவி : நாம தேடுர ஆள் ஒரு கோல்டு ஃப்ளேக் கிங்ஸ் யூஸ் பண்ற*

*ஸ்மோக்கர்.*

*அன்னபூர்னா: லோகேஸும் இடது கைப் பழக்கம் இருக்குறவன்;*

*அவனும் இதே சிகரெட் தான் புடிப்பான்.*

*அருணுக்கு லோகேஸின் மீது சந்தேகம் எழுந்தது.*

*ரவி : லோகேஸ் நேத்து நைட் 11:30 மணிக்கு எங்க ஹாஸ்டல் மேட்*

*விக்ரம்-ஓட பெர்த்டேல இருந்தோம்.அவன் ஃபேஸ்புக்ல போட்டோ*

போட்டுருந்தான்.வேனும்னா போய்ப் பார்த்துக்கோ.

லோகேஸ் : பயங்கரமா ப்ளான் பண்ணிருக்கான்.

ரவி : இல்லை,அறைகுறையா ப்ளான் பண்ணிருக்கான்.

மாதவி : உனக்கு எப்படித் தெரியும்.?

ரவி : கொல பண்ணவன் இந்தக் க்ரவுண்ட் பக்கத்துல இருக்குற

காம்பவுண்ட் சுவர் ஏறி குதிச்சு வந்துருகனும்,ஏன்னா இந்த வழிதா

யார் கண்ணுலயும் படாம வற்றதும் போரதும் ஈசி.வந்தவன்

கிட்டதா தீபிகாவோட டைரி இருந்துருக்கு.அந்தப் பேப்பர்ல இருந்த

எதோ ஒன்ன சிகரெட்டால சுட்டு குப்பத் தொட்டில போட்டு

போயிருக்கான்.8:30 க்கு மேல தீபிகாவ கட்டி வச்சு 11:00 மணிக்கு

கொண்ணுருக்கான்.11 மணிக்குத்தான் ஆள் நடமாட்டம்

இல்லாததால அப்போ கொண்ணுருக்கான்.கொண்ணுட்டு

வந்த வழியாவே தப்பிச்சுருக்கான்.அப்போ தான் நீங்க ரெண்டு

பேரும் பாத்துருக்கீங்க.இதுக்கு அந்த வாட்ச்மேன் ஆனிஷ் ஹெல்ப்

பண்ணிருகனும்,தனியாலாம் இத செய்ய முடியாது.இதுக்கு

ஆனிஷ் தான் கண்டிப்பா ப்ளான் போட்டுக் குடுத்துருக்கனும்.

அனா பாதியிலேயே சொதப்பி பாடிய இங்கயே விட்டு

போயிட்டானுங்க.

அன்னபூர்னா : அப்போ அந்த சூட்கேஸ் ?

ரவி : அந்த சூட்கேஸ்ல எந்த கைரேகையும் இல்ல.அது போலிஸ

கன்ஃபுயூஸ் பன்றதுக்காக விட்டு போயிருக்கான்.

தீபிகாவின் இந்த ஊர் சொந்தமான அவளது பெரியப்பா,பெரியம்மா மற்றும் அண்ணன் வந்ததைக் கவனித்த அனைவரும் அவர்களிடம் சென்றனர்.உறவை இழந்த குடும்பத்தின் சோகம் அனைவரின் முகத்திலும் இருந்தது.தீபிகாவின் அண்ணன்''குரு'' சொல்லிதான் தீபிகா இங்கே சேர்க்கப்பட்டாள் என குருவின் அம்மாவின் அழுகுரல் அனைவரையும் சற்று சோகத்தில் ஆழ்த்தியது.குருவும் அவரது அப்பாவும்,குருவின் அம்மாவின் மனதைத் தேற்றவே போராடிக்கொண்டிருந்தனர்.

பொதுவாக தன் கல்லாரிக்குத் திரும்பி வரும் எந்த பழைய மாணவனும் கல்லூரியில்

ஏற்பட்ட மாற்றத்தை கவனிப்பான்.அனால்,இரண்டு ஆண்டுகள் கழித்து வந்த குருவிற்கு கல்லூரியை கவனிக்க மனமில்லை.தீபிகாவின் பெரியப்பா குடும்பத்தினரிடம் தனித்தனியே விசாரணை நடந்து கொண்டருந்தது.

குருவை அழைக்கும் போது எதிர்பாராத விதமாக எதிரே வந்த ரவியின் மீது மோதினான்.இந்த மொதலில் கீழே விழுந்த ரவியின் செல்ஃபோனோடு செர்த்து,குருவிற்கு தன் மீது மோதியது யார் எனத் தெரிகிறது.குரு செல்ஃபோனை எடுத்து ரவியின் கையில் கொடுத்தான்.

குரு : டேய் நீ ரவி தானே...

ரவி : ஆமா,அண்ணா...

குரு : நீ என்னடா இங்க?

ரவி : நான் இந்தக் கேஸ்ல முக்கிய துருப்புச்சீட்டு.

குரு : துருப்புச்சீட்டா..?

மனோஜ் : தம்பி குரு,சார் வெயிட் பண்றாறு வாப்பா.

குரு விசாரணைக்குப் போய்விட்டான்.விக்கி ,ரவியிடம் பேசத்தொடங்கினர்.

விக்கி : இன்னைக்குள்ள இந்தக் கேஸ்ஸ முடிச்சிடுவியா?

ரவி : கண்டிப்பா சார்.

விக்கி ஏளமாகச் சிரித்தார்.

விக்கி : உன்ன மாதிரி பல பேர நா பார்த்துருகேன்.உனக்கு முன்னாடி

வந்தவன்லாம் என் தலைக்கப் பின்னாடி ஃபோட்டோவாத்

தொங்குறானுங்க.அட போப்பா ,ஒரே நாள்ள கேஸ்ஸ

முடிப்பேன்னு காமெடி பண்ணிட்டு இருக்க.

ரவி மீண்டும் யோசிக்கத் தொடங்கினான்.

ரவி : போட்டோ, தலைக்குப் பின்னாடி.... (மனதிற்குள்)

தீபிகாவின் செல்ஃபோனில் இருந்த மெமரிக் கார்டைக் கழட்டி அதை லேப்டாபுடன் இணைத்து உள்ளே என்ன இருக்கிறது என்ன இருக்கிறது என்று மேயத் தொடங்கினான் ரவி.

ரவியிடம் பேசிக்கொண்டிருந்த விக்கியின் கவனம் ராஜேஷின் பக்கம் திரும்பியது.

விக்கி : யோவ் என்னயா, உன் பேன்ட் இவ்ளோ பெருசா இருக்கு?

ராஜேஷ் : டெய்லி ஜிம்முக்குப் போயி உடம்ப குறச்சுட்டேன்ல அதான்

பேன்ட் சைஸ் பெருசாயிருச்சு.

இன்ஸ்பெக்டர் ரமேஷ் கொண்டு வந்த ஆனிஷ் கொலை பற்றிய ரிப்போர்டை ரவி புரட்ட ஆரம்பித்தான்.

*லோகேஸ் : மச்சான் மணி 11 ஆச்சு போயி சாப்டு வந்துருவோமா?*

எம்.சி.ஏ ப்ளாக்கில் நடந்த விசாரணையை முடித்து விடு வெளியே வந்த அருணின் கண்ணில் வெறுப்பும் ரவியின் மீது கோபமும் தென்பட்டது.இதை கவனித்த ரவி லோகேஸுக்கு பதிலளித்தான்.

*ரவி : கொஞ்சம் வெயிட் பண்றா ரெண்டு பேரும் சேர்ந்தேப் போய்*

*சாப்டலாம்.*

ரவி அருணிடம் சென்றான்.அருண் அப்போது குருவிடம் பேசிக்கொண்டிருந்தான்.

*அருண் : என்ன ரவி, எதாவது கண்டுபுடுச்சீங்களா? இல்லையா?*

*ரவி : சார் அது வந்து...*

அருண் : அட என்னப்பா நீ....

ரவி : இந்த “குரு”தான் கொண்ணானு எப்படி சார் நா சொல்லுவேன்.

அருணுக்கு ஒரு விநாடி அதிர்ச்சி யானது.அதிர்ச்சியில் அருணின் கருவிழி விரிந்தது.அருகில் பின்னால் திரும்பி ஓட ஆரம்பித்தான். பதற்றமும் கூட மனிதனின் கண்களை மறைக்கும் போல,எதிரே வந்த மனோஜின் மீது மோதி இருவரும் கீழே விழுந்தனர்.அருண்,ரவி இருவரும் குரு வின் மீது பாய்ந்தனர்.இறுதியாக குருவின் கைக்கு விலங்கு பூட்டப்பட்டது.

குரு : என்னோட தங்கச்சிய எப்படி டா நானே கொல்லுவேன்?

ரவி : அதுக்கு என்கிட்ட பதில் இல்ல,அனா நீதா கொல

பண்ணேன்றதுக்கு ஆதாரம் இருக்கு.

குரு : என்னடா ஆதாரம்...

*ரவி: நம்பர்-1, நீ ஒரு இடதுகை பழக்கம் உள்ளவன். அது உன்னப் பத்தி*

*தெரிஞ்ச எல்லாருக்கும் தெரியும்.*

*நம்பர்-2, நீ ஒரு கோல்டு ஃப்ளேக் கிங்ஸ் சிகரெட் யூஸ் பண்றவன்.*

*உன் மேல நா மோதுனப்போ, உன்னோட சட்டப் பேக்கெட்ல அந்த*

*சிகரெட் பாக்ஸ நா பார்த்தேன். இப்பக் கூட அது உன் பாக்கெட்ல*

*தான் இருக்கு.*

*நம்பர்-3, நீ ஒரு பேஸ்கெட்பால் ப்ளேயர் , அந்தப் பழக்க தோஷத்துல*

*தான் தீபிகாவ அங்க வச்சுக் கொன்னுருக்க. இதுக்கு ப்ரூஃப்*

*தீபிகாவோட நீ எடுத்த செல்ஃபில உன் தலைக்குப் பின்னாடி*

நீ பேஸ்கெட்பால் விளையாடுற மாதிரி ஒரு பழைய போட்டோ

இருக்கு.எந்த ப்ளேயரும் க்ரவுண்டுகுள்ள வச்சு கொல

பண்ணுவானானு தெரியல அனா நீ பண்ணிருக்க.

நம்பர்-4,உன்னோட பேண்ட் சைஸ்,ரமேஷ் சார் குடுத்த ரிப்போர்ட்-ல

ஆனிஷ் ரூம்ல ரெண்டு ஈரமான பேன்ட் இருந்துச்சு அதுல ஒன்னோட

சைஸ் 30,ரெண்டாவது பேன்ட் சைஸ் 36.அது உன்னோடது.

நம்பர்-5, ரொம்ப முக்கியமானது உன்னோட விரல் ரேகை.

தீபிகாவோட ஃபோன்ல கிடச்ச ரேகை,ஆனிஷ் வீட்ல கிடச்ச

ரேகை,என்னோட ஃபோன்ல நீ எடுத்தப்போ அதுல கிடச்ச ரேகை.

இதெல்லா கரெக்டா மேட்ச் ஆகி நீதாங்கிறத காட்டிக்குடுத்திருச்சு.

அவளக் கொல்ற வரைக்கும் இருந்த தைரியம்,அதுக்கப்பறம்

இல்லாமலே போச்சு அதான் பொணத்த அப்படியே போட்டு

ஒடிட்ட.உன் மேல சந்தேகம் வரக் கூடாதுன்னு நீ இந்த விசாரணைக்கு

வந்துருக்க.அனா,எனக்கு முன்னாடி இருந்தே உன் மேல சந்தேகம்

இருந்துச்சு.

அருண் : மனோஜ். ?அவன ஸ்டேசனுக்கு கூட்டிடுப் போங்க.

குரு வண்டியில் ஏற்றப்பட்டு வண்டி ஸ்டேசனுக்குப் புறப்பட்டது.ரவிக்கு நன்றி சொல்ல அருண் திரும்பிப் பார்த்த போது, நடந்ததற்கும் ரவிக்கும் சம்பந்தம் இல்லாததது போல்,அருணுக்கு வாங்கி வைத்திருந்த டீயை எடுத்துக் குடித்துக்கொண்டிருந்தான்.

அருண் : சூப்பர் டா, நா கூட உன்ன என்னமோ நெனச்சேன்.

ரவி : சார் ஒரு உதவி.

அருண்: என்ன?

ரவி : டீ ஆறிப்போச்சு,வேற ஒன்னு வாங்கித் தறீங்களா.

மறுநாள் பத்திரிக்கையில் இந்தச் செய்தி வெளியானது.வேறு சமூகத்தைச் சேர்ந்தப் பையனை காதலித்ததால்,தன் நண்பன்

ஆனிஷுடன் சேர்ந்து தீபிகாவைக் கொன்றதாகவும்,உண்மையை வெளியில் சொல்லாமல் இருக்க ஆனிஷ் பணம் கேட்டு மிரட்டியதால் அவனையும் கொன்றதாகவும்.குருவின் ஒப்புதல் வாக்குமூலம் வெளியானது.இதை லோகேஸ் தன்னுடைய ரூம்மில் படித்துக் கொண்டிருந்தான்.அப்போது ரவி ஜன்னல் வழியே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான்.

லோகேஸ் : லவ் பண்ணதுக்காகவா கொல்லுவான்; சரி என்னடா உன்

பேரே இல்ல?

ரவி : நான்தான்டா வேணாம்னு சோல்லிட்டேன்.

மீண்டும் வெளியே பார்த்துக் கொண்டிருந்த ரவியின் வலது கண்ணில் லேசாக கண்ணீர் வெளிவந்தது.யாருக்குத் தெரியும் வாழ்கை ஓட்டத்தில் இதே காரணத்திற்காகக் கொல்லப்பட்ட தன் காதலி “ரத்னா”வை நினைத்தானோ? என்னவோ?

தேர்ந்தெடுக்கவும், நிராகரிக்கவும் உரிமை கொடுக்காத நிலையில் பெண்சுதந்திரம் என்பது புகையில் தோன்றும் உருவங்களே....

# கதை-2 பெர்த் டே (Birthday)

தேதி: 1-12-2019.
நேரம்: இரவு 12:30

என்னுடைய 18 வது பிறந்தநாள் விழாவைக் கொண்டாடி

முடித்தேன். இந்த முறை என் அம்மாவோடும் செல்ஃபோனில் கிடைத்த

என் வித்யாவின் முத்தோடும் நிகழ்ந்தது.

“காலையில மத்ததெல்லாம் பாத்துக்கலாம், இப்போ போய்த் தூங்கு”

என்ற என் அம்மாவின் அதட்டல் சத்தம் எனக்கு படுக்கை அறையை

ஞாபகப்படுத்தியது.

காலையில் கேட்கப்போகும் என் காதலி “வித்யா”வின்

குரலுக்காக காத்திருப்புடன் தூங்கினேன்.

*தேதி:1-12-2019.*
*நேரம்:காலை 7:55*

“டேய்! பிறந்தநாள் அதுவும் இவ்ளோ நேரம் தூங்கக்கூடாதுடா தம்பி” என்ற என் அம்மாவின் குரல் என்னை

எழுப்பியது.படுக்கையில் அமர்ந்தபடி மெதுவாகக் கழுத்தை

அசைத்துக் கொண்டிருந்தேன்.

(காலண்டரில் டிசம்பர் 1 வட்டமிடப் பட்டிருந்தது)

என் காதலியின் செல்ஃபோன் அழைப்பால் ஃபோன்

வைப்ரேட் ஆனது.செல்ஃபோனைக் கையில் எடுக்கும்போது மேசையில்

உள்ள அலாரம் க்ளாகைப் பார்த்தேன்.நேரம்:காலை 7:55.

க்கால் அட்டென்ட் பண்ணி காதில் வைத்தவுடன்,''குட் மார்னிங் பெபி'' என்ற என் வித்யாவின் குரல். குட் மார்னிங் என்ற என் பதிலுக்குப் பின் "என்றப் பண்ற?" என வித்யா கேட்டபோது...

ஸ்ஆ!!! என்ற சத்தம் சமையல் அறையில் வேலை செய்யும் என் அம்மாவிடம் இருந்து வந்தது.''நான் அப்பறம் கூப்டுறேன்'' என வித்யாவிற்கு பதில் அளித்து விட்டுப் படுக்கையை விட்டு எழுந்து என் அம்மாவைப் பார்க்கச் சென்றேன்.சமையல் அறையின் நுழைவில் சிறிது தண்ணீர் சிந்தி இருந்தது.

"என்னாச்சுமா?" என்று நான் கேட்க,காய்கறி வெட்டும் போது ஸ்லிப் ஆகி விரலை கட் பண்ணிட்டேன் டா,போய் மருந்தை

*எடுத்திட்டு வா; என அம்மா சொன்னவுடன், வேகமாகத் திரும்பி மருந்தை எடுக்கத் திரும்பும் போதுக் கீழே சிந்தி இருந்தத் தண்ணீரில் கால் வழுக்கிக் கீழே விழுந்தேன்.விழுந்ததில் தலையில் அடி படக் கண்களை மூடினேன்*

*தேதி:2-12-19.*
*நேரம்:காலை 7:55*

*அதிர்ச்சியுடன் படுக்கையை விட்டு எழுந்தேன்.கண்டது கனவு என உணர்ந்தேன்.சந்தேகத்துடன் மேசை மேல் இருந்த அலாரம் க்ளாக்கைப் பார்த்தேன் நேரம் 7:55.கனவில் வந்தது போல வித்யாவின் க்கால் வந்தது.(மொபைலின் வைப்ரேட்)*

*(காலண்டரில் 1 ஆம் தேதி வட்டமிடப்பட்டு அடிக்கப்பட்டு 2 ஆம் தேதி வட்டமிடப் பட்டிருந்தது)*

க்கால் அட்டென்ட் பண்ணிக் காதில் வைத்தேன்.''குட் மார்னிங் பேபி'' என்ற வித்யாவின் குரல் என்னை மேலும் பயமுறுத்தியது.

அம்மாவின் அதே சத்தம் கேட்டது.சென்றுப் பார்த்தேன்.இப்போது சமையல் அறை நுழைவில் எந்தத் தண்ணீரும் இல்லை, சில துளி ரத்தம் மட்டுமே தரையில் இருந்தது.சிறிது சந்தேகத்துடன்,என்னமா? இங்க ரத்தம் சிந்தியிருக்கு? என நான் கேட்டதற்கு, ஒன்னுமில்லடா காய்கறி நருக்கும் போது விரலை வெட்டிடேன்,அப்போ கையை உதரும் போது ரத்தம் தெறிச்சிடுச்சு.

நீ போய் மருந்தை எடுத்திட்டு வா... என அம்மா சொல்லும் போது நான் வெட்டியக் கத்தியைப் பார்த்தேன்.கத்தியில் ஒரு துளி ரத்தம் கூட இல்லை.மருந்தை எடுத்திட்டு வாடா...!! என அம்மா அதட்டல் செய்ய நான் மருந்தை எடுக்கப் போனேன்.

*இந்த முறை சமையல் அறையயைத் தாண்டி விட்டேன்.''அது கனவு டா'' என என்னை நானேத் திட்டிக் கொண்டு கப்போர்டைத் திறந்து மருந்தை எடுத்தேன்.மருந்தை எடுத்துவிட்டு கப்போர்டை மூடியவுடன்,தலை சுற்றிக் கீழே விழுந்தேன்.விழுந்தவுடன் கண்களை மூடினேன்.*

*தேதி:3-12-19.*
*நேரம்:காலை 7:55*

*மீண்டும் அதிர்ச்சியுடன் எழுந்தேன்.பயத்தோடு அலாரம் க்ளாக்கைப் பார்த்தேன்.அதே 7:55 ல் இருந்தது.அலாரம் க்ளாக்கைக் கையில் எடுத்துத் தட்டிப் பார்த்தேன்.அலாரம் க்ளாக்கை மேசையில் வைக்கும் போது வித்யாவின் க்கால். (மொபைலின் வைப்ரேட்)*

*(காலண்டரில் 1,2 ஆம் தேதிகள் வட்டமிடப்பட்டு அடிக்கப்பட்டு 3 ஆம் தேதி வட்டமிடப்பட்டிருந்தது)*

க்கால் அட்டென்ட் பண்ணி காதில் வைத்ததும் "குட் மார்னிங் பேபி" என்ற வித்யாவின் குரல் என்னைப் பயத்தின் உச்சத்திற்கு கொண்டுபோனது.ஃபோனைக் கீழேப் போட்டு விட்டுப் பயத்தில் ஓடத் தொடங்கினேன்.படுக்கை அறையை விட்டு வெளியேரும் போது அம்மாவின் அதே சத்தம் என்னை மேலும் பயமுறுத்த வாசலை நோக்கி வேகமாக ஓடினேன்.

ஓடும் போது மீண்டும் ஏதோ ஒன்று என்னைத் தடுக்க, கால் இடறிக் கீழே விழுந்தேன்.விழுந்த வேகத்தில் கண்களை மூடினேன்.

*தேதி:4-12-19.*
*நேரம்:காலை 7:55*

வேகமாக எழுந்திரித்தேன்.எழுந்திரித்த வேகத்தில் அலாரம் க்ளாக்கைப் பார்க்க நேரம் 7:55.

(காலண்டரில் 1,2,3 ஆம் தேதிகள் வட்டமிடப்பட்டு அடிக்கப் பட்டு 4 ஆம் தேதி வட்டமிடப்பட்டிருந்தது)

வித்யாவின் க்கால் அட்டென்ட் பண்ணினேன்.அதே வார்த்தை கேட்டது.க்காலைக் கட் செய்வதற்குள் அம்மாவின் சத்தம்.எனக்கு நடக்கும் விசித்திரத்தைப் பற்றி யோசித்தேன்.இதுவரை நடந்ததையெல்லாம் திருப்பிப் பார்த்தேன்.

அம்மாவின் கையில் ரத்தம்,அனால் கத்தியில் ரத்தம் இல்லை,ஒவ்வொரு முறையும் நான் விழும் போது எனக்கு எந்த அடியும் ஏற்படுவதில்லை,ரத்தமும் வரவில்லை.கத்தியை நான் கையில் எடுத்துப் பார்த்துக் கொண்டிருந்த

போது அம்மா என்னிடம் சத்தமாகப் பேசினார்கள்.கத்தியில் என் ரத்தம் பட்டால் எதாவது நடக்கும்,இந்த சுழற்சியில் இருந்து தப்பிவிடலாம் என்ற நம்பிக்கையில் சமையல் அறைக்குப் போனேன்.அம்மாக் கையைத் தண்ணீரில் கழுவிக் கொண்டிருந்தனர்.சமையல் அறையின் உள்ளேச் சென்று எதுவும் பேசாமல் கத்தியைக் கையில் எடுத்தேன்.டேய்!...மருந்தை எடுத்திட்டு வாடா என அம்மா சொன்னார்கள்.அம்மாவை ஒருப் பார்வைப் பார்த்து விட்டு மீண்டும் கத்தியைப் பார்த்தேன்.அம்மா மீண்டும் சத்தமாக''மருந்தை எடுத்திட்டு வா'' எனக் கூறினார்கள்.

நான் ஒன்றும் பேசாமல் கத்தியைப் பார்த்த படியே இருக்க அம்மாத் தன் குரலை உயர்த்தத் தொடங்கிய போது ஃபேனின் சத்தம்,குழாயிலிருந்து வரும் நீரின் சத்தம்,குரைக்கும் நாயின் சத்தம்,வெளியே சாலையில் செல்லும் பைக்கின் சத்தம் எல்லாம் அதிகரிக்கத் தொடங்கியது.ஒரு விநாடி மூச்சை இழுத்து இடது கையின் நரம்பை வெட்டினேன்.

*தேதி:5-12-19.*
*நேரம்:காலை 8:00*

*படுபயத்துடன் வேகமாக எழுந்திருத்தேன்.ஃபேன் ஓடியும் என் முகத்தில் வியர்வை.மேசையில் இருந்த அலாரம் க்ளாக்கைப் பார்த்தேன்.(நேரம் 8:00).நிமிர்ந்து காலண்டரைப் பார்த்தேன்.(1,2,3,4 ஆம் தேதிகள் வட்டமிடப்பட்டு அடிக்கப்பட்டிருந்தது.)5 ஆம் தேதியில் எந்தக் குறியீடும் இல்லை.*

*அம்மா வேகமாக என் அறைக்குள் வந்தார்.''ஹேப்பி பெர்த் டே'' டா ;சரி நான் கோவிலுக்குப் போறேன் ;சாப்பாடு செஞ்சு வச்சிருக்கேன்,சாப்டிடு ;எனச் சொன்னார்.சரி என்பது போல் நான் தலையசைக்க அம்மா என் அறையைவிட்டு வெளியே சென்றார்கள்.அம்மா போன உடனே வித்யாமிடமிருந்து க்கால்.க்காலை அட்டென்ட் பண்ணி காதில் வைத்தேன்.*

*''ஹேப்பி பெர்த் டே பேபி'' என்ற வித்யாவின் குரல். தேங்க் யூ -டி என பதிலளித்த உடன், ''மருந்தை எடத்திட்டு வா'' என்று கோபமானக் குரல் வெளியேக் கேட்டது...*

*மனிதர்கள் மட்டுமல்ல, காலமுமம் தன்னைத் தானே மாற்றிக் கொள்ளக்கூடும்.*

***நன்றி!!!***

